




# திருநீற்றுப் பதிகம்

# திருநீற்றுப் பதிகம்

**திருச்சிற்றம்பலம்**

காந்தாரம் -திரு ஆலவாய்

**மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு**

**சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு**

**தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு**

**செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே.** *1*

**வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு**

**போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு**

**ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு**

**சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே.** *2*

**முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு**

**சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு**

**பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு**

**சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே.** *3*

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. *4*

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு வந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. *5*

அருத்தம தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. *6*

எயிலது வட்டது நீறு விருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தாலவா யான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆலவா யான்திரு நீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மாலவா யான்திரு நீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங்கூட

கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு

எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு

அண்டத்த வர்பணிந் தேத்தும் ஆலவா யான்திரு நீறே. *10*

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்

போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்

தேற்றித் தென்னனுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்

சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. *11*

சுவாமி : சொக்கலிங்கப் பெருமான்.

அம்பாள் : அங்கயற்கண்ணி.





திருஞான சம்பந்தர் கூன்பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்த்தல்



அரசரும் அரசியாரும் பிள்ளையாரை வழிபடுதல்



அருள்மிகு மீனாக்ஷி ஸுந்தரேஶ்வரர் திருக்கோவில்

மதுரை (திரு ஆலவாய்)